உ

ஸ்ரீராஜ ராஜேஸ்வரி ஸஹாயம்.



# ஸ்ரீகோமதியம்பாள் ஸ்தோத்திரம்.

இவை

ஒழுகிணசேரி,

**எஸ். லக்ஷ்மி அம்மாளால்**

இயற்றப்பட்டன.

முதல் பதிப்பு

திருநெல்வேலி மேலரதவீதி,

ஆனந்தா பிரஸில் அச்சிடப்பட்டது.



Price Annas Five.    விலை அணா ஐந்து

# முகவுரை



வெகுநாட்களாக என்மனதில்க் குடிகொண்ட எண்ணமானது தற்பொழுதுதான் சங்கரன் கோவில் ஸ்ரீ கோமதி அம்பாளின் அனுக்கிரகத்தினால் ஒருவாரு கைகூடியது.

பிரதி செவ்வாய், வெள்ளி முதலிய கிழமைகளிலும் நவராத்திரி முதலிய விசேஷகாலங்களிலும் நாம் நம்முடைய முழுமனதையும் சர்வேஸ்வரியாகிய ஸ்ரீ கோமதியம்பாளின் பாதத்தில் செலுத்தினால் முக்தி பெறலாம் ஸ்ரீ கோமதியம்பாளின் உத்தரவுப்படி நான் இதிலடங்கிய பாடல்களை எல்லோருக்கும் பிரயோஜனப் படும்படி இயற்றியுள்ளேன்.

இக்கலியுகத்திலே தற்காலத்தில் பிரத்யக்ஷமாயும், வரப்பிரசாதியுமான ஸ்ரீ கோமதியம்பாளின் பாடல்களை மிகவும் பக்தியுடன் பாடியும் பூஜித்தும் வருபவர்களுக்கு யாதொரு குறைவுமின்றி சகல விதமான ஐஸ்வரியமும், ஆயுளும், புத்ர சம்பத்தும் கூடிவருமென்பதற்கு ஒரு சிறிதும் சந்தேகமில்லை.

இச்சிறு புத்தகத்திலுள்ள குற்றங்களை நீக்கி அதிலுள்ள சாராம்சங்களை மட்டும் கிரகித்து மிகவும் பக்தியுடன் கோமதியம்பாளைப் பஜிப்பவர்களை அந்த தேவி ஒருநாளும் கைவிடமாட்டாள் என்பது திண்ணம்.

தேவியின் கிருபைக்கு எல்லோரும் பாத்திரர்களாவார்களாக



c/o ஏர்வாடி
என். ராமசுப்பய்யர்,
அட்வொகேட், புதுகிராமம்
திருநெல்வேலி ஜங்ஷன்.

எஸ் லக்ஷ்மி அம்மாள்

உ

# கோமதி அம்பாள் ஸ்தோத்திரம்.

## விநாயகர் ஸ்துதி.

ராகம் குறிஞ்சி தாளம் ஆதி.

(ஜெயந்தீ விநாயகா என்ற மெட்டு.)

பல்லவி.

(1) குஞ்சர முகா என்னை
வந்தருள் செய்வாய் ஜய (குஞ்சர)

அநுபல்லவி

கெஜ முகா உன்னை
நம்பினேன் வருவாய் ஜெய (குஞ்சர).

சரணம்

தேவி சரித்திரத்தை — சிறியவள் நானுரைக்க
வினைகள் வாராமல் - காப்பாய் — வருவாய் (குஞ்சர)

ஐந்து கரனே - உன்னை
அடியாள் - நானும் பணிந்தேன்
கோமதி மகிமையை உரைக்க - துணைசெய்வாய்
வருவாய் (குஞ்சர)

# ஸரஸ்வதி ஸ்தோத்திரம்.

(2) ராகம் காப்பி ஆதி - தாளம்.

ஜெகத்குரு பர ஷண்முகா - என்ற மெட்டு.

பல்லவி.

தாயே வந்தருள் செய்குவாய்
ஸரஸ்வதி – (தாயே).

அனுபல்லவி.

நாராயணி கீர்த்தனம் - நன்மையாய் நானுரைக்க
நான்முகன் தேவியே - என்நாவில் வரவேணுமம்மா (தாயே)

சரணம்.

குழந்தை எனக்கிரங்கி - பிழைகளைத்திருத்தி
ஸந்ததமும் ஸரஸ்வதி - உன் சரணமடி பணிந்தேன் (தாயே)

---

(3) ராகம் நீலாம்புரீ தாளம்–சாபு.

நின் நாமம் உச்சரித்த என்ற மெட்டு.

பல்லவி

கருணையுடனே — உன்னை
காண மன — மகிழ்ந்தேன்
கதம்பவனத்தில் வந்தேன் கமலாக்ஷி (கருணை)

அனுபல்லவி

பாதச் சிலம்பைக் — கண்டேன்
காலாழி — மீலி கண்டேன்
கவலையெல்லாம் வென்றேன் — கல்யாணி (கருணை)

சரணம்.

(1) இடையில் — பீதாம்பரம் கண்டேன்
இசைந்த — ஒட்டியாணம் கண்டேன்.
எதிரினில் உன்னைக் கண்டேன் ஜெகதீஸ்வரி
கையில் கங்கணம் — கண்டேன்
கனத்தகனயாழி — கண்டேன்
வங்கி வளையும் — கண்டேன்
உன் வடிவும் — கண்டேன் (கருணை)

(2) மார்பினில் — பதக்கமும்
மல்சிய ரேகையும் — கண்டேன்.
மணிமாலை ஜெபமாலை - உன்மகிமை கண்டேன்
முருக்கம்பூப்போல் — உதடும்
கபோலத்தில் — ஒளியும்
நெற்றியில் — திலகமும்
உன் நேர்த்தி — கண்டேன் (கருணை)

(3) விரலினில் — க்ரீடமும்
சிந்தாமணி — பீடமும்
கோவிலில் — கூட்டமும்
கோமதியின் — சேர்வை கண்டேன். (கருணை)

---

(4) இன்னும் பராமுகம் என்தாயே என்ற மெட்டு.

பல்லவி

ஏனோ பராமுகம் — என் தாயே
அடியாளுக்கு அருள் செய்குவாயே. (ஏனோ)

அனுபல்லவி.

ஷண்முகனைப்பெற்ற தாயே
சங்கடங்களை தீர்ப்பாய் நீயே
பாரினில் உன்னைவிட கார்ப்பவர்களும் உண்டோ
தாமஸம் செய்யாமலே சங்கரீ நீ வருவாயே (ஏனோ)

சரணம்,

ஒருவர் உதவியும் காணேனே
என் துயர் யாரிடம் சொல்லுவேன்
கூவி அழைத்தேனே என்குல தெய்வமே உன்னை
கோமதி உன் பாதத்தில்
கோடி நமஸ்கரித்தேன் அம்பாள் (ஏனோ)

——()——

(5) எதுகேதீ நாகு என்ற மெட்டு.

பல்லவி.

எது கெதி காணேன் — தேவி — தேவி,
தேவி — தேவி — தேவி—ஸ்ரீதேவி,

அனுபல்லவி.

கருணை இரங்கி கார்க்கலாகாத
தாயே தாயே தாயே என் மாதே (எது)

சரணம்.

தாயும் நீ தந்தை நீ தெய்வமும் நீயே.
தயவுடன் என்னை ஆள வருவாய் நீயே
பாரிலே செய்த பாவங்கள் தீர
தாமஸம் ஏனோ கோமதீ தாயே (எது)

(6) வருவாய் பரங்கிரி வாழ்வடிவேலா என்ற மெட்டு.

பல்லவி.

புன்னுவனத்தில் வாழும் புவனேஸ்வரி
போற்றினேன் உன் பாதத்தில் ஜெகதீஸ்வரீ
தருவாய் நினைத்தவரம் ஜெகன்மாதே.
தாமஸம் செய்யாமலே என்னை ஆள்வாய்
வருவாயே வருவாயே
வந்து எனக்கு வரம் தருவாயே (புன்னு)

அனுபல்லவி.

என்ன செய் வேன் இனி — என் தெய்வமே
ஏதுகெதியும் காணேன் வருவாயே.
கருணையிரங்கி என்னைக்கார்ப்பாயே.
ஸ்கந்தனைபெற்ற தாயே! வருவாயே.
கார்ப்பாயே கார்ப்பாயே,
கவலைவாராமல் என்னை கார்ப்பாயே— (புன்னு)

சரணம்.

சங்கரியே உன்னை நம்பினேன் நான்
தஞ்சம் ஒருவரும் காணேன் அம்பாள்
குழந்தை எனக்கிரங்கி வருவாயே.
கோமதி உன் பாதத்தில் சேர்த்தருள்வாய்
கெதி நீயே கெதி நீயே
ஈஸ்வரீ உன் பாதத்தில் நமஸ்கரித்தேன் (புன்னு)

---

(7) ராகம். கல்யாணி, தாளம்—ஆதி

சரவணபவா என்ற மெட்டு.

பல்லவி

சங்கரீ நீயே — தயவு செய்வாயே (ச)

அனுபல்லவி.

பரமொருதுணை — காணேன் பரதேவி,
பரதேவதா உன் பாதமே நம்பினேன். (ச)

சரணம்.

தேவாதி தேவரும் தினம் ஸ்துதிக்கவே
தேவி நீ அவர்க்கு — வரம் கொடுக்கவே
கூடி அவர்களும் — உன்னை ஸ்துதிக்கவே
கோமதீ நீயும் — வரம்தருவாயே. (ச)

---

(8) ராகம்: ஸஹாந தாளம் — ஆதி.
நீயே ஸகாயமென என்றமெட்டு.

பல்லவி.

சங்கரன் கோவினில் — வாழ்ந்திடும் கோமதீ
தஞ்சம் — உனைப்பணிந்தேன்

அனுபல்லவி.

தங்கச்சப்பரம் ஏறி — தபசுக்கு வரும்போது
ஸகல ஜனங்களுக்கும் — வரமளிக்கும் இஸ்வரி (சங்)

சரணம்.

சங்கரநாராயணருடன் — ஸப்ரமஞ்சம் தனிலேறி
சந்தோஷமாக யிருக்காய்
மைந்தரில்லாமையால் — மனவருத்தங்கொண்டேன்—நான்
மைந்தர்களையளித்தாய் — மாஹேஸ்வரியும் அம்பாள் (சங்)

கண்கொள்ள சேவையும் — காக்ஷிகளையும் கண்டேன்
கதம்பவனவாஸினீ — கார்த்தருள் புரிவாயே
கோரும்வரம் தருவாய் — கூடிநானு மகிழ
கோமதியுன் பாதத்தில் — கோடி நமஸ்காரம் அம்பாள் (சங்)

---

(9) ராகம் பியாக் தாளம் ஆதி.

தாயே ஜெகதம்பிகை — என்ற மெட்டு,

பல்லவி.

புன்னைவனத்தில் வாழும்—கோமதீ
பூஜைசெய்து – மகிழ்ந்தேன் - நான்
உன்னை - பூஜைசெய்து – மகிழ்ந்தேன்.

அனுபல்லவி.

உன் பள்ளியறை — தெரிசனம்
பார்க்கமிக — ஆசைகொண்டு
பக்தியுடனே — வந்து
பாதம் — பணிந்தேன் அம்பாள். (புன்)

சரணம்.

கல்லிழைத்த - கட்டிடமும் – கண்ணாடிசுவர்களும்
கண்டால் கலிதீருமே - ஸ்கந்தனைப்பெற்றவளே (புன்)
சங்கருடனே நீயும் ஸந்தோஷமாயிருக்க
ஸகலவித பக்ஷணமும் — தாம்பூலமும் தரித்தாய்
கோமதியுன் பாதத்தில்நானும் கோடிவந்தனம் அம்மா(புன்)

---

(10) ராகம் முகாரி. தாளம்-சாபு.

என்றைக்கு — சிவகிருபை — என்ற மெட்டு.

பல்லவி.

சங்கரர் தேவி நீ — வருவாய் எந்தன்
ஸங்கட வினைகளை — தீர்ப்பாய்

அனுபல்லவி.

ஒன்றும் அறியாதா — நான்
ஊமை போல் — திரிபவள்
உன்னைத் தவிர வேறு—ஒன்று மறியேனே—நான் (சங்)

சரணம்.

முன்செய்த — வினையினால் — முழுதும் மூடனானேன்
பின்கொஞ்சம் தபபலனால் — உன் போானந்திமடைந்தேன்.
என்றும் மறவேன் அம்மா — இஸ்வரியுன்பாதத்தில்
என்னை ரெக்ஷிப்பாயென்று—எண்ணியிருக்கேனம்மா (சங்)

குருடனுக்குக்கண்ணை — கொடுக்கும் மஹாமாயே.
கூவியழைத்தேனே என் ஆவி தவிக்குறதே
குழந்தை நான் படும்பாட்டை கோரி நீயும் மறிவாய்
கோமதியுன்பாதத்தில் — கோடிவந்தனம் அம்மா (சங்)

---

(11) ராகம் தன்யாசி தாளம்—ஆதி.

ராதாகிருஷ்ணனே — என்ற மெட்டு

பல்லவி.

உந்தன் பாதத்தை — நம்பி வந்தேனே நான்
உலகநாயகி — தாயே (உன்.)

அனுபல்லவி

அன்று முதலாய் — உன்னை நம்பிவந்தேன் நான்.
ஆண்டவனே வந்து — அருள்புரிவாயே (உன்)

சரணம்.

புன்னைவனத்திலே நீ — புகழுடன் வசிக்கிறாய்
முன்செய்த தபத்தினால் — உன் முன்னிலையில் வந்தேன்
அன்று நடுநிசியில் — ஆபத்துவேளையில்
உன் ஆனந்தத்திருக்கையால் — அணைத்து யென்னை எடுத்து
மடிதன்னிலே வைத்து — மயங்காதே என்று சொல்லி
ஒரு மைதனையும் அளித்தாய்-மாஹேஸ்வரியும் சென்றாய் (உன்)
இன்னம் இந்த நாளில் — என் கஷ்டம் தீரவே
எங்காதே யென்று சொல்லி — எதிரினில் வந்து தோன்றி.
குழந்தை நான் உன்னிடத்தில் — கூசாமல் பேசினேன்
கோமதியுன் பாதத்தில் — கோடி நமஸ்கரித்தேன் (உன்)

(12) ராகம். மோஹனம் தாளம் – சாபு

க்ஷேமம் — குருகோபாலா — என்ற மெட்டு.

பல்லவி.

தேவி ஸ்ரீ கோமதீ — உந்தனைத்தேடி
வாடிவதங்கினேன் — அம்பாள் — (தேவி)

அனுபல்லவி.

ஆதியில் தேவர்களை — ஆதரித்தாண்டவளே
பூமியில் எந்தனுக்கு - பெருமையளிப்பாயம்பாள் (தேவி)

சரணம்.

உன் நெற்றியில் திலகமும் — நேர்த்தியாய் பார்வையும்
நேசித்துவந்தவரை — ரக்ஷிக்கும் திறமையும்
நீங்காத ஸந்தான — ஸம்பத்துகளை யளிக்கும்
நீலகண்ட குடும்பினீ – நேராக வருவாயே (தேவி)

கூவிக்கூவியழைத்தும் — குரலொலிகேள்க்கலேயோ
கோமளவல்லியென்மேல் — கோபம் கொள்ளலாமோ
குழந்தை யெனக்கிரங்கி — கூசாமல் வருவாயே
கோமதீ உன் பாதத்தில் — கோடி வந்தனம் அம்பாள் (தேவி)

---

(13) எதுகுல காம்போதி தாளம் – சாபு

பேயாண்டி தன்னைக்கண்டு — என்ற மெட்டு

பல்லவி

வருவாய் — வருவாயென்று
உன் வரும்வழி — தனை நோக்கி
வணங்கி — நமஸ்க்கரித்தேனே (வரு)

அநுபல்லவி.

தருவாய் வரங்களெல்லாம் — சங்கரர் தேவியே
ஸாஷ்டாங்கமாகவுன்னை — நமஸ்கரித்தேனே அம்பாள் [வரு]

சரணம்.

ஆதியில் தேவர்களை — ஆண்டவளே ரக்ஷித்தாய்
தாயே உன்பாதத்தில் — சரணமென்றுபணிந்தேன் (வரு)
அன்னை தந்தையும் நீயே — அகிலபந்துவும் நீயே
அம்பிகை வந்தென்னை — ஆண்டருள் செய்வாயே
குழந்தை நானும் உன்னை — கூவியழைத்தேனே
கோமதியுன் பாதத்தில் — கோடிநமஸ்கரித்தேன் (வரு)

---

(14) ராகம் தோடி தாளம் ரூபகம்

மீனலோசனி — என்ற மெட்டு.

பல்லவி

தேவி - இஸ்வரீ அம்பாள்
தேவாதி - தேவி - நீ — அம்பாள் (தேவி)

அனுபல்லவி.

பாவி என் தன் — துயரம் தீர்த்து
உன் பாதத்தில் — சேர்த்தருள்வாயே (தேவி)

சரணம்.

சந்திர கலாதாரீ — சங்கரர் தேவி நீ
ஆரும்மற்ற — பாவியென்னை
ஆதரித்து — ஆளுவாய் அம்பாள் (தேவி)
குவலயம் — தன்னிலே நான்
கோடிபாவங்கள் — செய்தாலும்
அதை யெல்லாம் — நீ பொருத்து
ஆதரிப்பாய் — ஆண்டவளே (தேவி)
கூவினாலும் — கேள்க்கலையோ
குழந்தை என்னை — மறந்தனையோ
கோமதீ நான் உன்பாதத்தில்
கோடி நமஸ்காரம் — அம்பாள் (தேவி)

---

(15) ராகம் பந்துவராளி தாளம் ரூபகம்

ஸம்போ மஹாதேவா — என்ற மெட்டு.

பல்லவி.

ஸம்போ — மஹா தேவி
சங்கரி — வந்தருள் — வாயே (ஸம்)

அனுபல்லவி.

ஸம்போ — மஹா தேவி
சாரூப்புஜ — தருவாய் அம்பாள்
உன்னை நம்பி — வந்தேனே நான்
பாதாம்புஜ — பக்திம் தேவி (ஸம்)

சரணம்.

பரமதயா — ஹரசங்கரா
தாகங்கா — தாசங்கரீ
வருவாய் — வரம் — தருவாய் அம்பாள்
கதம்பவன — வாஸினி
ரமணீ சுந்தரி கல்யாணி
ரமணீ — கலியுக தாரிணி
மல்யுத்வஜ — பாண்டிய ராஜ
மகளாகிய — கோமதீ நீ (ஸம்)

---

(16) ராகம்: கல்யாணி தாளம் — ரூபகம்

வேலா — நீ கதியே — என்ற மெட்டு.

பல்லவி

நம்பினேன் — உனையே
அம்பிகை — கோமதீ — உன் தாளினை (நம்பி)

அனுபல்லவி.

கருணைசெய் — நீ — என்னைப்பாராய்
கவலைகள் — வாாமல் — கார்ப்பாய்
காமித — பல — தாயகீ
கார்த்து — என்னை — ஆதரிப்பாய் (நம்பி)

சரணம்.

ஆதிமுதல் நான் — உன்னைவேண்டி
அம்பிகே — உன் — ஸந்நிதிதேடி
வந்தேன் எனக்கு — வரங்களும் தந்தாய்
வா — வென்று உந்தன் — ஸந்நிதிக்கழைத்தாய் (நம்பி)
குழந்தை நான் சொல்லும் கவியில் ஏதேனும்
குறைகளிருந்தால் — அதை நீ பொறுத்து
கோமதியே — நான் — உன் பாதத்தில்
கோடி நமஸ்காரம் — அம்பாள் (நம்பி)

---

(17) ராகம் தாளம்—சாபு

உன்னை நம்பினேன் என்ற மெட்டு

பல்லவி.

உன்னை நம்பினேன் — நானம்மா
கோமதியம்பாள் — உன் பாதத்தை
என்றும் மறவேன் — காரம்மா

அனுபல்லவி.

உன்னை நம்பினேன் — ஒரு துணையுமில்லை
அன்னையே — வந்து ஆதரிப்பாய் (உன்)

சரணம்.

சண்டமுண்டானை — ஸம்ஹரித்தாயே
சங்கரீ நீயும் — சாம்பவீ யென்று பேரும் பெற்றாயே
தஞ்சம் என்று — வந்த தேவரை
சந்தோஷமாக — நீயும் ரக்ஷித்து
அவர் — சங்கடங்களை — தீர்த்தவளே (உன்)

ஏழை நான்படும் — அயரம் தீரவே
இவ்வரி நீயும் — இறங்கியேவந்து
என்னைக் — கார்ப்பாயே.
ஆரும்இல்லை — எனக்கிரங்க
அம்பிகே நீயும் — வாரும் அம்மா
ஆதியே — பரம் — ஜோதியே என்
அம்பிகை - உன்னை - நம்பினேன் நான் (உன்)

---

(18) ராகம் சமாஸ் ஆதி - தாளம்

இந்த வனத்திலே என்ற மெட்டு.

பல்லவி.

காக்ஷிகண் — காக்ஷியே
கோமதீ — திருக்கோவிலின் (காக்ஷி)

அனுபல்லவி.

காக்ஷிகண் — காக்ஷியே — கல்யாணி தெரிசனம்
ஆராலும் — சொல்லப்போமோ
அம்பாள் — மகிமையை — (காக்ஷி)

சரணம்.

நாலுபக்கமும் — மண்டபங்களும்
நடுவிலே — நாகர்சுனைகளும்
ஸந்நிதிக் கெதிரிலே — ஸ்ரீசக்ரகுழிகளும்
கண்டால் மனசு — களிக்குதம்மா
கவலைகளும் — தீருமே (காக்ஷி)

ஓயாத பேய்களெல்லாம் — ஓட்டிவைக்கும் அம்பிகே
தீராத — என் கவலை — தீர்க்கவருவாயே

ஆருமில்லை — அனாதையானேன்
அம்பிகே வந்து — காரம்மா (காக்ஷி)

---

(19) ராகம் சங்கராபரணம் தாளம்—ஆதி.

சகஜகுண ராமா என்ற — மெட்டு.)

பல்லவி.

ஸகல — குணநிதியே
அம்பாள் — தாயே — (ஸக.)

அனுபல்லவி.

புகழும் — புன்னைவனத்தில்
வாழும் — கோமதிதாயே
உந்தன் — மகிமைதன்னை
சொல்லப் — போகுமோ அம்பாள் (ஸக)

சரணம்

பாரினில் — நான் செய்த
பாவங்களும் — தீர
பார்த்து — மனமிரங்கி
ஆதரிப் — பாயே
ஆரும் — அற்றகுழந்தை
அம்பாள் நீயே — ரெக்ஷிப்பாய்
பாரினில் — புகழ்பெற்ற
பாண்டிய — குமாரி அம்பாள் (ஸக)

---

(20) ராகம் அமீர்கல்யாணி தாளம் ஆதி.

ஸன்னதிவரலாமா என்ற மெட்டு

பல்லவி.

தாயே நீ வருவாயே தேவி
தெரிசனம் தருவாயே (தா)

அனுபல்லவி.

ஸங்கடம் எந்தன் மனமூடி
இருந்தேனே என்று மிகவாடி
ஸ்கந்தன் கணபதி உடன் கூடி
சீக்கிரம் வருவாய் என்னைநாடி (தா)

சரணம்.

விதிவசத்தால் உன்னை மறந்திருந்தேனே நான்
வீண்காலம் கழித்துக்கொண்டிருந்தேன் நான்
தேவிமனமிரங்கி அழைத்தாள் என்னை
சேவடிதன்னை அடைந்தேனே நான் (தா)

---

(21) ராகம் அமீர்கல்யாணிராகம் ஆதி தாளம்

ஞானபண்டித மோட்டிலால் என்ற மெட்டு

பல்லவி

புன்னகைவன இஸ்வரீ
போற்றினேன் உன்னை

அனுபல்லவி

தேடினேன் நானே — சேவடிதன்னை
தேவர்குறை தீர்த்தாயே — தேவியே நீயும் (பு)

சரணம்.

தவிக்குரேன் நானே - அம்பிகே சங்கரீ
தஞ்சம் வேறு இல்லை.
தாயே நீ வரம் தருவாய் தயவிரங்கி (பு)

அன்னையே - வருவாயே
ஆரும் உதவி காணேன்
அல்லதன்னை ஒழிப்பாயே - அம்பிகே நீயும் (பு)
தாமதம் ஏனோ - அம்பிகே சங்கரீ
சங்கரர் தேவி
தாயே நீ வரம் தருவாய் - சங்கரீ நீயும் (பு)

---

(22) வாவாவேலய்யனே என்ற மெட்டு

பல்லவி.

தபஸின் – மகிமை - பாருங்கோ
சிவசங்கரீ செய்த (த)

அநுபல்லவி.

தபஸின் மகிமைதன்னை சற்றவே நானுரைக்க
ஸ்கந்தன் கணபதி என்கருத்தில் வரவேணுமிப்போ (த)

சரணம்.

பதினாயிரம் - வருஷமும்
பக்தியுடன் – தபஸிருந்து
பரமசிவனை தியானம் செய்து
பரிதாபத்தோடிருந்தாள்
தேவியை சோதிக்கவென்று
சிவசங்கரரும் - சீக்கிரமாகவே வந்தார் (த)

தேவியிடத்தில் சென்று
தேன்மாரிப் பொழிந்தாப்போல்
என்ன வரம் – வேணுமென்று
இஸ்வரரும் தானுரைத்தார் (த)

ஸாயரூபத்தைக் காணவென்று
சோகமிகக்கொண்டிருந்தேன்
மனமிரங்கி காரும் உமை
மாலையிட என்தனுக்கு.
சரணம் பணிந்து நின்றாளே
சிவசங்கரியாள் (தபஸின்)

---

(23) கிளிக்கண்ணி தாளம் ஆதி.

எட்டாப்பழமடியோ என்ற மெட்டு,

(1) ஆண்டவள் பாதத்தில் நான்
அனுதினமும் – பணிந்தேன்
ஆதரிப்பாள் – அம்பிகையும் என்ஸகியே
அவளுடன் சென்றிடுவோம்.

(2) பாவி உடல் – எடுத்து
பாரினில் அலைகிறேன்
பாராயோ எந்தனை நீ என் தேவி
தீராயோ என் கவலை.

(3) காலைரெயில் ஏறிவிட்டோம்
கடயநல்லூர் தாண்டிவிட்டோம்
பாம்பன்கோவில் தாண்டிவிட்டோம் சங்கரன்
கோவில் வந்து சேர்ந்துவிட்டோம்

(4) கூடிநாம் – எல்லோருமாய்
கோவில் செல்வோம் ஜோராய்
கோமதி பாதந்தன்னில் – என் ஸகியே
கோடி நமஸ்கரிப்போம்

---

(24) ராகம். பியாக் தாளம்—ஆதி

நிருபமான ஸ்வாமி என்ற மெட்டு.

பல்லவி.

நினைந்து மனம் — உருகினேநான்
நீயிரங்கிவருவாய் — அம்பாள் (நினை)

அனுபல்லவி.

மனமிரங்கி — என்னைக்கார்த்து
மகிஷாசுரனை வதைத்ததாயே (நினை)

சரணம்.

பக்தர்தேவரின் — குறைகள்தீர
பண்டாஸுரனை — வதைத்ததாயே
ஜெயங்கள் கொண்ட — இஸ்வரீ நீயும்
ஜெகதீஸ்வரரை — மணங்கொண்டவளே (நினை)

கலியுகத்தில் — கண்கண்ட தெய்வமே
காமேச்வரியே உன்னைக் காண
கோமதீ உந்தன் — பாதம்தன்னில்
கோடி நமஸ்காரம் - அம்பாள் (நினை)

---

(20) ராகம் ஆனந்தபைரவி தாளம்

பல்லவி.

இன்னம் இரக்கம்வரவில்லையா
என் மீதில் இன்னம் இரக்கம் வரவில்லையா

அனுபல்லவி.

தேவி ஸ்ரீ கோமதி உன் — திருவடியை பணிந்தேன்
தீராத்துயரம் தீர்ப்பாய் —சின்மயாரூபியே (இ)

சரணம்.

பாவி நானும் ஒரு பெண் ஜென்மம் எடுத்தேனே
பாதேவதா நீயும் பரிபாலித் தருள் செய்வாய்
எவரென்ன சொன்னால் என் பாவம் தீரவே
இஸ்வரியே நீயும் இரங்கி கண் பாரம்மா (இ)

பாரினில்நான்செய்த — பாவங்களும் தீர
பகவதியே உன்தன் — பாதத்தில் சேரும்படி
இன்னும் தாமஸம் என்ன — ஏழையைக் கண்பார்க்க
எதுகெதியும் காணேன் - இறங்கியே வருவாயே (இ)

---

(26) ஸ்ரீமன் நாருயண ஹரியே என்ற மெட்டு.

பல்லவி

அம்பாள் உன்னைப் பணிந்தேன் - கோமதீ
ஆரும் உதவிக்காணேன் (அம்)

அனுபல்லவி.

தாணியில் புகழ்பெற்ற — சங்கரன்கோவினில்
தங்கிடும் கோமதியே — உன்
தபசின் மகிமைதன்னை — காணவென்றல்லோரும்
ஸந்நதித் — தேடிவராள். (அம்)

சரணம்.

(1) தங்கச்சப்பரம் — தன்னிலே — ஏறிநீ
தபஸிற்கு — வருவதையும் ஸ்ரீ
சக்ரத்திலிருந்து நீ — ஸகலோரையும் — பரி
பாலனம் — செய்வதயும் (அம்)

(2) உன் காக்ஷிஎயக்கண்டு — மனமகிழ்ந்து எந்தன்
காலம் — கழித்திருந்தேன் — என்

கஷ்டதிசையினுல் — உன் காக்ஷிகளையிழந்து
கலங்குரேன் — நானுமிப்போ (அம்)

(3) இந்திராதிதேவர்களுக் — கிருந்த சங்கடங்களை
எக்ஷணத்திலே — தீர்த்தாயே — இன்னும்
ஏழை எளியோர்களை — ரெக்ஷிக்கவேணுமென்று
கருத்தோடு — இருக்கிருயே (அம்)

(4) நேசமாகப்பணிந்தேன் — விஸ்வாசமாக வருவாய்
தாஸன் எனக்கிரங்கி — கோமதீ
உன் பாதத்தில் — கோடி நமஸ்கரித்தேன்
குழந்தை — எனக்கிரங்காய் (அம்)

---

(27) ராகம் தன்யாஸி தாளம்—ஆதி.

ஆடும் சென்தூர் இதுவோ — என்ற மெட்டு.

பல்லவி

புன்னுவனம் — இதுவோ.
புகழ்பெற்ற — புன்னுவனம் — இதுவோ

அனுபல்லவி.

தேடிவந்த — ஜனங்களை
தன்னை — ரெக்ஷிப்பதென்று
திடமனசுடனே — காத்திடுவாள் நம்மை (புன்)

சரணம்.

1. பாருலகில் பிறந்து — படுந்துயரங்களெல்லாம்
பரதேவதா நீயும் - பார்த்து இருக்கலாமா
நாகர்சுனை நீராடி - நல்லகதியடைய
ஸந்நிதிதேடிவந்தேன் — தெரிசனம் தருவாயே (புன்)

2. உடல் வாழ்வு சொந்தமெல்லாம் உறக்கத்தில்கனவுபோல்
திடமாய் முழித்தால் அந்த—செய்கை தெரியுமடி
உற்றார் உறவினர்கள் - பெற்றோர் இருந்தாலென்ன
உமையவள் பாதத்தை – கொள்வாய் மனமே (புன்)

3. தாயைப்பிரிந்து நானும் — தவித்திடும்போது எந்தன்
சங்கரியும் அறிந்து — எந்தன் எதிரில் வந்து
அஞ்சாதே என்று சொல்லி – ஆனந்த மகிழ்வுடன்
அம்பிகையும் எனக்கு—அமிர்தத்தை யளித்தாளே (புன்)

---

(28) ஸஹானா தாளம் - ஆதி

அம்மா பரதேவதா என்ற மெட்டு.

பல்லவி.

தாயே — பரதேவதா
தஞ்சம் என்று வந்தேன் நான்
தெரிசனம் - தருவாயென் அம்மணி (தாயே)

அனுபல்லவி.

தேடித்தேடி அலைந்தும் — உன்சேவடி காணேன் அம்மா
மோடிசெய்யாமலே—வாடியென்னை ரக்ஷிக்க (தாயே)

சரணம்

1. கலியுகத்தில் ஜென்மம் – எடுத்து நானுமிப்போ
கலங்குவதையும் நீயும் - காணவில்லையோ அம்பாள் (தா)

2. கதம்பவனவாஸினீ - காமேச்வரர் ப்ரீயே
கடைக்கண்ணால் பார்த்து என்னை –கைதூக்கி ஆதரிப்பாய்

3. ஸம்ஸாரஸாகரத்தில் - தாழ்ந்துகிடக்கும் என்னை [தா)
தாங்கிகரையேற்றுவாய்— அம்பிகே (தாயே)

4. சங்காருடனே நீ—சந்தோஷமாக வந்து
சஞ்சலங்களைத்தீர்த்து—தெரிசனம் தருவாயே (தா)

(29) சங்கராபரணம்

பாகிமாம் அம்பிகை என்ற மெட்டு.

பல்லவி

தாயே ஜெகதம்பிகே—தஞ்சமென்று பணிந்தேன்
தேவியெனக்கிரங்கி—சீக்கிரத்தில் வருவாயே (தாயே)

அனுபல்லவி

காமேஸ்வரர் ப்ரியே—கார்த்தருள் புரிவாயே
கூவியழைத்தேன் உன்னை - கோமதி வருவாயே (தாயே)

சரணம்

சங்கரர்தேவி நீயே—தஞ்சம் உன்னைப் பணிந்தேன்
சாது என்னை ரெக்ஷிப்பாய்—ஆரும் உதவிக்காணேன்
தேவர்குறைதீர்த்த— ஸ்ரீலோகாம்பிகை
சாதுஉன்னை நம்பினேன்—தாயே வரம் தருவாய் (தாயே)
கதம்பவனவாஸிநீ—ஸ்கந்தனைப்பெற்றவளே
ஆதியந்தமும் நீயே—என் ஆவியுடலும் நீயே
தீராத்துயரம் தீர்ப்பாய்—தேவியுன்னை நம்பினேன்
ஆரும் உதவிக்காணேன்—அம்பிகே வருவாயே (தாயே)

30 மங்களம்

நீணுமா–ரூபமுலகு–என்ற மெட்டு

ஸ்ரீ ராஜ — ராஜேஸ்வரி
நித்யாஜெய — மங்களம்
பரமானந்த — ஸொரூபி
பாதாரவிந்தம் பணிந்தேன் (ஸ்ரீராஜ)
கருணா—கடாக்ஷி நீயே
கதம்பவன வாஸிநீயே (ஸ்ரீராஜ).

சுபம் சுபம்

## புத்தகம் கிடைக்குமிடம்.

(1) விலன் ஸ்டோர்ஸ்

வீராகவபுரம், திருநெல்வேலி ஜங்ஷன்.

) K. மகாதேவ பாகவதர்

ஒழுகிணசேரி, நாகர்கோவில்.

) K. S. நெல்லையப்ப அய்யர்

ஆறுமுக விலாஸ் புத்தகசாலை சுவாமிசந்நதி,
திருநெல்வேலி.

4) K. வாஞ்சீசுரய்யர்

தளவாதெரு, வடிவீசுரம் நாகர்கோவில்.